## கருத்துப் போட்டி எண்-17 முடிவு

"எரி நட்சத்திரம்" சித்திரக்கதை கருத்து போட்டியில், பாராட்ட தகுந்த அளவில் கருத்துக்களை அனுப்பியவர்கள் எஸ். எம். சரவணன் (திருவொற்றியூர்), எல். ஸ்ரீராம் (கோமலீஸ்வரன் பேட்டை), கே. ஆர். தங்கவேலு (காளிபாளையம்), மு. ராமகிருஷ்ணன் (திண்டுக்கல்-4), எஸ். பார்த்தசாரதி (அண்ணாநகர், சென்னை), ஏ. முனுசாமி (பரங்கிமலை, சென்னை-16) ஆகியோர் ஆவார்கள்.

ஆனால் மிகச் சிறந்த கருத்தை அனுப்பியவர் என்று தேர்ந்து எடுக்கப்பட்டு, அதற்காக ரூ. 50 பரிசு பெறுபவர்:—

ஏ. விஜயலட்சுமி,

எண் 70, கோர்ட் வீதி,

ஈரோடு-638 001

பெரியார் மாவட்டம்.

அவரது கருத்து வருமாறு:—

"ராணி காமிக்ஸ் 25-ம் இதழில் வெளியான "எரி நட்சத்திரம்" துப்பறியும் கதையில், ஒரு பரபரப்பான கட்டம்—பிரான்ஸ் நாட்டில் ஒரு குறிப்பிட்ட விலாசத்துக்கு ஜேம்ஸ் பாண்ட் அழைக்கப்படுகிறார்.

அந்த விலாசத்துக்கு உரிய கட்டிடத்தில், ஜேம்ஸ் பாண்டின் கண்காணிப்பையும் மீறி, பின்புறமாக நுழைந்து ரோச்சி குழுவினர், வலைவிரித்து காத்து இருக்கிறார்கள்.

ஜேம்ஸ் பாண்டின் கதி என்னவாகுமோ என நம் உள்ளம் படபடக்கும் நேரத்தில், சூழ்ச்சியை மோப்பம்பிடிப்பதில் கில்லாடியான நம் "007" தந்திரமாக அந்தக் கட்டிடத்தின் மாடிக்குச் சென்று அங்கிருந்து கீழ்மாடி அறை ஜன்னலுக்கு இறங்கி, கண்ணாடியை நொறுக்கி, "ரோச்சி! அந்த முட்டாள் இதோ வந்துவிட்டான்!" என்று எதிரிகளை மடக்கும் காட்சி நம்மை மெய்சிலிர்க்க வைக்கிறது.

"உளவாளிகளும் துப்பறிவாளர்களும், எந்த நேரத்திலும், உஷார் நிலையில் இருப்பதோடு, சூழ்ச்சிகளை இனங்காணும் உள் உணர்வும், சக்தியும், சதிகளைத் தக்க தந்திரத்தால் முறியடிக்கும் சமயோஜித புத்தியும் உடையவர்களாகவும் இருக்கவேண்டும்" என்ற உண்மையை அந்த சம்பவம் படம் பிடித்துக் காட்டிய காரணத்தால் என்னைக் கவர்ந்தது.

இவ்வாறு விஜயலட்சுமி கூறியுள்ளார்.

ராணி காமிக்ஸ்—27
(மாதம் இருமுறை இதழ்)

TV

ஆகஸ்டு 1—14
1985

# ஜேம்ஸ் பாண்ட் துப்பறியும், கவச உடை!



நெல்சன்



மிர்சா



காசிம்



மார்கோ



ஜென்னி



டாக்டர் பார்



ஜேக் டோனர்

இங்கிலாந்து ராணுவ ஆய்வு நிலைய தலைவர் தாமஸ். அவரது பெண் உதவியாளர் மிஸ் மார்கோ. இருவரும் ஒரு ஓட்டலில் சாப்பிட்டனர்.

திரும்பவும் அந்த பயங்கர தலைவலி வந்து விட்டது!

கொஞ்சம் மது குடித்து பாரேன்!

ஆ! ஐயோ!

மிஸ் மார்கோ! இதை குடியுங்க! தலைவலி பறந்து விடும்!

ஓட்டல் சர்வர் வந்து மது கொடுத்ததும், குமாரி மார்கோ பயத்தில் அலறினாள்!

திடீர் என்று எனக்குள் ஒரு பயங்கர கற்பனை! வெயிட்டர், என்னை மன்னித்து விடும்!

ஆமா பாஸ்! அந்த வெயிட்டர் கண்ணாடி தம்ளரை பிடித்த விதம் ஒரு கற்பனை பயத்தை ஏற்படுத்தி விட்டது.

மார்கோ! உடல்நலம் இல்லையா?

தலைவலி வந்தால், கூடவே பயங்கர கற்பனை பயம் எழுந்து விடுகிறது!

இந்த கற்பனை பயம் உனக்கு அடிக்கடி வருகிறதே! ஒரு டாக்டரைப் பார்!



வீடு திரும்பிய மிஸ் மார்கோ படுத்துக்கொண்டாள். கொஞ்ச நேரத்தில் நன்றாக தூங்கிவிட்டாள்.
பிறகு ஒரு பயங்கர கனவு அவளை ஆட்கொண்டது.




கனவில், முகம் இல்லாத ஒரு உருவத்தை அவள் நெருங்கினாள்...




...திடீர் என்று அந்த உருவம் தீப்பற்றி எரிந்தது!




...அப்படி அது எரிந்தபோது, முகத்தில் தழும்பு உள்ள இன்னோர் உருவம் பேசியது.
உன் தவறுதான்! இந்த கொடூர சாவுக்கு நீயே காரணம்.




...ஆனா அதைப் பற்றி கவலைப் படாதே.
இதைக் குடி! உன் கவலைகளில் இருந்து விடு படலாம்!




மார்கோ, பயத்தில் கூச்சல் போட்டபடி, விழித்து எழுந்தாள்.



மறுநாள். ராணுவ ஆய்வு நிலையத்துக்கு வேலைக்கு வந்ததும்...
மார்கோ! உன்னைப் பார்த்தால் இரவில் தூங்கிய மாதிரியே தெரியவில்லையே!




ஆமா சார்! ஒரு உருவம் எரிவது போல் கோரக் கனவு! தலைவலி வந்தால் அப்படி கனவு வருகிறது!
நமது டாக்டருக்கு போன் செய்கிறேன்.




சரி, சார்!
இப்போது டவுனுக்குப் போய் இந்த சாமான்களை வாங்கி வா!




ஆபீசில் இருந்து மார்கோ காரில் புறப்பட்டாள். அவள் மனதில் பலவித குழப்பங்கள்!
DEFENCE RESEARCH LABORATORIES RESTRICTED AREA




அந்த ஆள் யார்? தெரிந்த முகம் போல் இருக்கிறதே!




அவர் முகத்தில் தழும்பு! மீசை!
நினைவு வந்துவிட்டது! என் கனவில் வந்த அதே முகம்!


அவள் திரும்பி ஆபீஸ் வந்ததும் தாமஸ் கேட்டார்—
மார்கோ! உன் முகம் பேய் அறைந்த மாதிரி இருக்கிறதே! என்ன காரணம்?
நான் ஒரு பேயை பார்த்தேன். சார்!


பேயை பார்த்தாயா? என்ன சொல்கிறாய்?


நான் கனவில் ஒருவரை பார்த்ததா சொன்னேன் அல்லவா? அந்த ஆளை நேரில் பார்த்தேன்!
கனவில் வந்த அதே முகம். வெட்டு காய தழும்பும், மீசையும் உள்ள முகம்!
மார்கோ! உனக்கு என்ன ஆச்சு? உடனடியா டாக்டரை போய் பார்!


மார்கோ டாக்டரை சந்தித்தாள்.
கனவில் ஒரு முகம் இல்லாத உருவம் தீப்பற்றி எரிவதைப் பார்க்கிறேன்.
தலைவலி வந்தால், பயங்கர கனவு வருகிறது இல்லையா?
ஆமா! ஒரே மாதிரி கோரக் கனவு!


பிறகு ஒரு கறுத்த மனிதர் தெரிகிறான். அவர் முகத்தில் வடு, மீசை எல்லாம் உள்ளன. அவன் என்னை குற்றம்சாட்டுகிறான்
பிறகு ஏதோ குடிக்க கொடுக்கிறான்.


அந்த ஆளை உனக்கு தெரியுமா?
இன்றுதான் அவனைப் பார்த்தேன்.


இந்த கோரக் கனவு கொஞ்ச நாட்களாகவே அடிக்கடி வருகிறது. என்னால் நிம்மதியாக இருக்க முடியவில்லை.
உன் அடிமனதில் இதற்கான காரணம் நிச்சயம் இருக்கும்!


உன் பிரச்சினையை ஒரு மனோதத்துவ டாக்டரால்தான் தீர்க்க முடியும்.


எதற்கும் இந்த மாத்திரைகளை தூங்கும் முன் 2 மாத்திரை வீதம் சாப்பிடு!


மறுநாள். மார்கோ ஆபீஸ் போனதும்.
நேற்று இரவு நல்லா தூங்கிவிட்டேன் சார். கனவே இல்லை. டாக்டருக்கு நன்றி சொல்லணும்!
மார்கோ! இன்று நீ பளிச்சென்று இருக்கிறாய்!

நமது இலாகாவின் "கவச உடை நிருபண திட்ட"த்தில் கலந்து கொள்பவர்கள்' யார் யார் என்ற பட்டியல் இதில் உள்ளது. அவர்கள் உள்ளே வர பாஸ் தயார் செய்.

உடை நிருபண திட்டமா?

ஆமா! அது ரொம்ப ரகசியமானது. அதன் சோதனைக்கு 12 பேர் வர இருக்காங்க. இன்று பிற்பகல் உடை நிருபணம் நடக்க இருக்கு.

யார், யார் வருகிறார்கள் சார்?

உடை நிருபண பரிசோதனைக்கு வரும் 12 பிரமுகர்களின் அடையாள விபரம், போட்டோ எல்லாம் இந்த பைலில் உள்ளன!

அவர்களுக்கு அடையாள அட்டைகளை தயார் செய். முன் வாசலில் நுழைய அனுமதி சீட்டும் தயார் செய்!

சரி சார்!


12 பெயர்கள்? ஒரு முக்கிய பெயர் விடுபட்டு உள்ளது. நான் அதை சேர்த்து விடுகிறேன்!


அதி ரகசியமாக நடைபெறும் கவச உடை நிரூபண சோதனைக்கு வரும் பிரமுகர்கள் பெயர்களை மார்கோ டைப் செய்தாள்.


அதில் 13—வது ஒரு நபர் பெயரை அவள் சேர்த்தாள்.
ஜார்ஜ் நெஸ் தலைமை விஞ்ஞானி கடற்படை ஆயுத பிரிவு ராணுவ இலாகா.




பிறகு மார்கோ, மேஜை டிராயரில் இருந்து ஒரு தாடிக்காரரர் போட்டோவை எடுத்தாள்.


உடை நிரூபண சோதனைக்கு பாஸ் வழங்குவதற்காக மற்ற போட்டோக் களுடன் அதைச் சேர்த்தாள்.
ஜார்ஜ் நெஸ்.


மதியம் 12 மணிக்குள் அடையாள அட்டைகளை தயார் செய்து விடுங்கள்.
சரி, மிஸ் மார்கோ!


பிற்பகல். பார்வையாளர்கள் ஒவ்வொருவராக வரத் தொடங்கினர்.
H.M. DEFENCE LABORATORY RESTRICTED


என் பெயர் ஜார்ஜ் நெஸ். கடற்படை ஆயுதப் பிரிவு.
எஸ்...13-வதாக உங்கள் பெயர் உள்ளது. இதோ உங்கள் அடையாள அட்டை....


தாமஸ் சார்! உடை நிருபண பரிசோதனை என்றால் என்ன?
அது பெரிய ரகசியம். டாக்டர் பார் என்பவர் ஒரு டச்சு நாட்டு விஞ்ஞானி.


அவர் ஒரு அற்புத ராணுவ உடையை தயாரித்து நமது அரசாங்கத்துக்கு கொடுத்து உள்ளார். அந்த உடையை துப்பாக்கி குண்டோ, ரசாயன பொருளோ, வெடி குண்டோ, அணு கதிர் இயக்கமோ தாக்காது! அதை இப்போ சோதித்து பார்க்க போகிறோம்!


கனவான்களே! இதுதான் அந்த கவச உடை. இரும்பை விட பலமானதும், ஆனால் கனம் குறைந்ததுமான பாரன் என்ற செயற்கை இழையால் தயாரிக்கப்பட்டது. இதை அணிந்து நடக்கவோ ஓடவோ எளிது


அந்த விசேட உடையை தயாரித்த டச்சு விஞ்ஞானி தொடர்ந்தார்.
பாரன் செயற்கை இழை இரண்டு முக்கிய ரசாயன பொருளால் ஆனது.


ஒரு ரசாயனப் பொருள் அவற்றை தாக்கும் பொருளை உஷ்ணமாக மாற்றிவிடும்.


அப்படி மாற்றப்படும் உஷ்ணத்தை அடுத்த ரசாயனம் கிரகித்துக் கொள்ளும்.
அதை இப்போது காட்டுவேன்.


போரில் குண்டு தாக்கினால் இந்த அதிசய கவசம். அணிந்து இருக்கும் வீரனுக்கு எந்த பாதிப்பும் இருக்காது













அனைவரும் சோதனை அறையை விட்டு வெளியே வந்தனர். அந்த அறைக்குள் டாக்டர் பார் மட்டும் இருந்துகொண்டு அந்த ஆடையை அணிந்து சோதித்து காட்ட திட்டம். அதை ஒரு டெலிவிஷன் மூலம் மற்ற பார்வையாளர்கள் பார்க்க ஏற்பாடு செய்யப்பட்டு இருந்தது. அதன்படி டாக்டர் பார் மட்டும் அந்த அறைக்குள் நுழைந்தார்.



கவச உடையை டாக்டர் அணிந்து கொண்டு, குண்டை கையில் எடுத்ததை டெலிவிஷனில் மற்றவர்கள் பார்த்தனர்.




ஒருவித புகை நிறைந்து இருப்பதை அறியாமல் டாக்டர் கைகுண்டை கீழே போட்டார்.





குண்டு வெடித்தது. ஆனால் டாக்டர் பார் நினைத்ததற்கு மாறாக, கவச உடை தீ பிடித்துக்கொண்டது.









காப்பாற்றும் முன், அந்த டச்சு விஞ்ஞானி உயிரோடு எரிந்து பிணம் ஆனார்.


ஐயோ! என்னல் தாங்க முடிய வில்லே!
எனது கனவில் வருவது போல், கோரச் சாவு கண் முன் நடக்கிறதே!


இந்தப் பெண்ணுக்கு மயக்கமா? நான் தெளிவிக் கிறேன்!


இவங்களே ஆபீஸ் அறைக்கு கொண்டு போய் ஆசுவாசப் படுத்து கிறேன்!
சரி! நான் மற்ற காரியங்களே கவனிக் கிறேன்.


மிஸ்! உட்கார்ந்து இளேப்பாருங்க! கொஞ்சம் தண்ணீர் தாரேன். குடியுங்க


பிறகு ஜார்ஜ், அவளுக்குத் தெரியாமல் ஒரு மாத்திரையை தண்ணீரில் போட்டார்.


தண்ணீரில் மாத்திரை கரைந்த பிறகு ஜார்ஜ், தன் ஒட்டுத் தாடியை எடுத்தார்.


பிறகு, மார்கோ அடிக்கடி கனவில் கண்ட தழும்பு மீசை உள்ள அந்த முகம் நன்ருக தெரியும்படி ஜார்ஜ் அவளிடம் சென்ருர்!


டாக்டர் செத்ததுக்கு நீயே பொறுப்பு. உன் தவருல்தான் அவர் செத்தார்!


சரி, கவலேயை விடு! இதை குடி!
ஏதோ சக்திக்கு கட்டுப்பட்டவள் போல் அவள் அதை குடித்தாள்.


கொஞ்ச நேரம் கழித்து தாமஸ் ஆபீஸ் திரும்பினர்.
மார்கோ!


உடனடியாக டாக்டர் வரவழைக்கப்பட்டார்.
இறந்து விட்டாள். அதிக சக்தி வாய்ந்த விஷம் குடித்து இருக்க வேண்டும்!


மார்கோவை
இங்கே
அழைத்து
வந்தவர் ஒரு
பார்வையாளர்.
அவர் எங்கே?


தாடி
வைத்து
இருந்தவர்
ஜார்ஜ் நெஸ்.
அரை மணி முன்னுல்
உள்ளே போனுர்.


நம்பர் 13. உங்கள்
லிஸ்ட் படிதான்
அடையாள கார்டு
கொடுத்தேன்.
ஜார்ஜ்
நெஸ்சா?
யார்
அது?


ஆனுல் 12
பார்வையாளர்களே
அனுமதி.
இதோ
13–வதாக அவர்
உள்ளார். லிஸ்டில்
கடைசி பெயர்!


அப்படி என்றுல் மிஸ்டர்
தாமஸ்! அந்த 13–வது
ஆளே உங்களுக்கு
தெரியாமல் லிஸ்டில்
சேர்த்தது உங்கள்
காரியதரிசி
மார்கோவா!
ஆமா சார்!
அவள்தான்!
DIRECTOR


டாக்டர் பாரின் கவச உடை ஏன் தி பிடித்தது என்று கண்டுபிடிக்க முடிந்ததா?
இன்னும் இல்லை. அந்த உடையில் கோளாறு இருந்து இருக்கலாம்.
அல்லது ஏதாவது சதி யாக இருக்கலாம்!


உங்க காரிய தரிசி மார்கோ, ஒரு துரோகி. அது மட்டும் உறுதி மிஸ்டர் தாமஸ்!


தாமஸ் சார்! டாக்டர் பார் இறந்ததால் மார்கோ தற்கொலை செய்து இருக்க சாத்தியம் உள்ளதா?


அல்லது அவள் அனுமதித்த அந்த ரகசிய உளவாளி ஜார்ஜ் அவளைக் கொலை செய்து இருப்பானா?
அது எப்படியோ, அவள் கனவு போல் நடந்து இருக்கு!


மறுநாள். உளவுத் துறையில்...
ஜேம்ஸ்! மார்கோ துரோகி ஆக ஏதோ பயமுறுத்தல் தான் காரணம்.


இந்த படத்தில் இருப்பவன் பெயர் பீட்டர். இவனுக்கும் மார்கோவுக்கும் என்ன தொடர்பு?
ஆமா, இப்படி கேட்டுக்கொண்டே இரு. நமது சக நிறுவனத்தில் பெரிய சதி வேலை நடந்து இருக்கு. நீ கேள்வி மேல் கேள்வி போடு!


இஸ்தான்புல்லில் 2 மாதத்துக்கு முன் மிஸ் மார்கோவுக்கு ஏதோ நடந்து இருக்கு. அதில் இருந்துதான் அவள் துரோகியாக மாறி இருக்கிருள்.
அந்த மர்மத்தை விடுவிக்க ஒரே ஆள் இந்த பீட்டர் தான்!


உளவுத்துறை தலைவர் "எம்" மிடம் 007 பேசிய பின்—
என்ன ஜேம்ஸ்! தலைவர் எப்படி இருக்கிருர்?
தலைவர் சூடா இருக்கார். வள், வள் என்று விழுகிருர்! புதிதா ஒரு வேலை கொடுத்தார். கிரேசி! வெளியே போகிறேன்!


ஜேம்ஸ், காரில் வெளியே போனுர். பிறகு திடீர் என்று காரை நிறுத்தி இறங்கினுர்.


சார், உங்க பெயர் பீட்டர் தானே!


ஆமா! நான் பீட்டர் தான்! நீங்க?
என் பெயர் ஜேம்ஸ்பாண்ட் உங்க வீட்டுக்கு போவோம். கொஞ்சம் பேச வேண்டும்!


அவர்களை, தெருவின் எதிர் புறம் மறைவில், நின்றபடி மார்கோவைக் கொன்ற மர்ம மனிதன் கவனித்தான்.


எதற்காக என்னிடம் பேசணும்?
மார்கோ என்ற பெண்ணைப் பற்றி உமக்கு தெரிந்த விவரங்களை எல்லாம் உடனடியா சொல்லும். இல்லை என் துப்பாக்கி உம்மை கொல்லும்.


2 மாதத்துக்கு முன், அவளை இஸ்தான்புல்லுக்கு சுற்றுப் பயணம் அழைத்துப் போன வழிகாட்டி நீர்தான். அவள் இஸ்தான்புல்லில் உடல்நலம் இல்லாமல், ஒரு தனியார் ஆஸ்பத்திரியில் சேர்க்கப்பட்டாள்.


ஆமா! அதற்கு என்ன?
அந்த ஆஸ்பத்திரி மூடப்பட்டு விட்டது. அந்த ஆஸ்பத்திரியை நடத்திய டாக்டர் நெல்சன், ஒரு போலி டாக்டர்!


சரி, அதனுல் எனக்கு என்ன?
அதனுல் என்னவா? மார்கோவை ஏன் இஸ்தான்புல்லுக்கு அழைத்துச் சென்றீர்? அதைச் சொல்லும்?


உண்மையைச் சொல்றேன். நெல்சன் ஆஸ்பத்திரிக்கு மார்கோ போக காரணம் என்ன என்று எனக்கு தெரியாது!
அப்படி சொல்லாதீர். அவள் ஆஸ்பத்திரியில் சேர்ந்ததை அவள் வேலே பார்க்கும் ஆபீசுக்கு கூட நீர் தகவல் சொன்னீராமே!


அவளுடன் வழிகாட்டியாக சென்றதால், இரக் கப்பட்டு அதைச் செய்தேன்!
சரி! திடீர் என்று உமக்கு உமது சம்பளத்தையும் மீறி பண வசதி ஏற்பட காரணம் என்ன?


உமக்கு ஒரு பணக்கார அழகியோடு திருமணம் நடக்க இருக்கு!


5 வருடத்துக்கு முன்னல் நீர் பார்மிகாமில் இருந்த போது ஒரு போலீஸ் வழக்கில் சிக்கினீர். அதை நான் வெளிப்படுத்தினல் உம் கல்யாணம் நின்றுவிடும்!
அந்த வழக்கு ஒரு தவருல் வந்தது. அதை நீங்கள் வெளியே சொல்லக் கூடாது!


சரி. அப்படியானல் அரை மணி நேரம் அவகாசம் தருகிறேன் மார்கோவுக்கு இஸ்தான்புல்லில் என்ன நடந்தது என்று சொல்!


இல்லை, உமது ரகசியத்தை அம்பலம் ஆக்குவேன். திருமணத்தை நிறுத்துவேன். வேலை பார்க்க விடாமலும் செய்வேன்.


அவன் வெளியே வருகிறன்!


ஜேம்ஸ் காரில் போவது போல் போய், ஒரு இடத்தில் இருந்து பீட்டர் வீட்டை நோட்டம் போட்டார்!
பீட்டர் உண்மையை சொல்வானு? உம்.. அரை மணியில் தெரிந்துவிடும்.


என்ன! இந்த கருவி வேலே செய்யவில்லேயே! பீட்டர் வீட்டில் நான் வைத்த ஒட்டு கேட்கும் கருவியால் பயன் இல்லாமல் போய் விட்டதே!


ஜேம்ஸ் கூறிய அரை மணி நேர கெடு முடிந்தது.
பீட்டர் வீட்டில்தான் இருக்கிறன். என்ன முடிவு செய்து இருக்கான் என்று பார்க்கிறேன்.


சாரி! தவறுதலா இடித்து விட்டேன்!


பீட்டர் வீட்டுக்கு 007 வந்ததும்
பீட்டர்! பீட்டர்! கதவைத் திற!


உம்! நீ திறக்கா விட்டால், நானே திறந்து உள்ளே வருகிறேன்!




ஜேம்ஸ் போலீசுக்கு தகவல் கொடுத்தார்.
விஷம்! தற்கொலையா இருககலாம்!


மறுநாள் ஜேம்ஸ் ஆபீஸ் திரும்பினர்.
சே! அந்த பீட்டர் இப்படி தற்கொலை செய்து கொண்டானே!


ஜேம்ஸ்! வா! பீட்டர்தான் ஒரே கருவி என்று சொன்னேனே! அப்படி இருந்தும் கோட்டை விட்டு விட்டாயே!


ஜேம்ஸ் அமைதியாக இருந்தார்.
உன் காரில் இருந்த ரிசீவர் கருவியில் எந்த ரிப்பேரும் இல்லை. யாரோ நாசவேலை செய்து இருக்காங்க!


மிஸ் மார்கோ பிரேத பரிசோதனை அறிக்கை, இது. வேறு சில தகவல்களையும் சேர்த்து வைத்து உள்ளேன்.


மார்கோவின் கோரக் கனவில் வந்த மனிதன் மீசை வைத்து இருக்கான். முகத்தில் காய தழும்பும் இருந்திருக்கு!
ஏதாவது துப்பு துலங்குதா?


பீட்டர் வீட்டுக்கு நான் 2-வது தடவை நுழையும்போது அதே அடையாளத்தோடு ஒருவன் எதிரே வந்தான்!
மார்கோ கனவில் வந்த அதே மனிதனு? கிரேசி!


எஸ் சார்!
அந்த போட்டோக்களை அனுப்பு!


கிட்டதட்ட இதே ஆள்தான்!
இந்தா இதை பார். இதை ராணுவ ஆய்வு நிலையம் அனுப்பி இருக்கு!


இரண்டு படங்களும் ஒன்றுபோல் இருப்பதாகவும், தான் பார்த்த ஆள் அந்த படங்களுடன் ஒத்து இருப்ப தாகவும் 007 கூறினர்.
தாடி ஆள் ஜார்ஜ் இவன்தான் மார்கோ இறக்கும் போது உடன் இருந்தவன்


2 பேரும் ஒன்ருக, ஒரே ஆளாக இருக்கலாம்!


இந்த ஆள் நேற்று இரவு இஸ்தான்புல் போய்விட்டதாக தகவல் கிடைத்து இருக்கு.
நெல்சன் என்ற பெயரில் பாஸ்போர்ட் வைத்து இருந்தாலும்!


இந்த நெல்சன்தான் போலி டாக்டராக இஸ்தான்புல்லில் கிளினிக் நடத்தியது.
இஸ்தான்புல்லில் உளவு வேலையில் கைதேர்ந்த காசிம் என்பவன் இருக்கான். அவனுக்கும் நெல்சனுக்கும் தொடர்பு இருக்குமோ?


காசிம் படம் போட்டு காட்டப்பட்டது.
இவன்தான் காசிம். ஆயுதங்களை விற்கும் புரோக்கர். அதுபோக தனியார் உளவு நிறுவனம் ஒன்றை நடத்தி வருகிறன்.
இந்த ஆளுக்கும், ராணுவ கவச உடை நாசவேலைக்கும் எப்படி தொடர்பு இருக்கமுடியும்?


அதனுல், அவர் அந்த ராணுவ உடை பற்றி காசிமிடம் புரோக்கர் என்ற முறையில் ஏதோ பேரம் பேசி இருக்க வேண்டும். இல்லையா?
அந்த கவச உடையை தயாரித்த டாக்டர் இங்கே, லண்டனுக்கு வருவதற்கு முன் இஸ்தான்புல் போய் இருக்கிறர்!


ஜேம்ஸ்பாண்ட் இஸ்தான்புல் போனார். விமான நிலையத்தில் அங்குள்ள இங்கிலாந்து பெண் உளவாளி ஸ்டெல்லா வரவேற்றார்.
நீங்க போனில் சொன்ன நெல்சன் பற்றி கொஞ்சம் விவரம் கிடைத்து இருக்கு!


மீசை, முகத்தில் தழும்பு இவற்றுடன் ஒரு ஆள் நேற்று வந்து இறங்கியதாக ஒரு போர்ட்டர் கூறினான்.


அவன் பெயர் மிர்சாவா?
இதே ஆள்தான் பெரிய மீசையும் காது வளையமும் உள்ள ஒரு வழுக்கைத் தலையன் ஓட்டி வந்த நீல நிற காரில் போனார்.


நெல்சனை சந்தித்த அந்த மிர்சா என்பவனை உனக்குத் தெரியுமா ஸ்டெல்லா?
கிராண்ட் பஜாரில் அவனுக்கு ஒரு கடை இருக்கு. அந்த கடைக்கும் காசிமுக்கும் தொடர்பு உண்டு!


அந்த மிர்சாவை அடையாளம் கண்டு பிடிப்பது சுலபம்.
ஆனா அவன் பயங்கரமான ஆள்.


அதோ அதுதான் மிர்சா!


அந்த மிர்சா, அந்த நீல காருக்கு போகிறுன்!
ஸ்டெல்லா! இறங்கிக்கோ! கார் எனக்கு வேண்டும்!


மிர்சா கார் இஸ்தான்புல்லுக்கு வெளியே போனது.
என்னை ஒரு கார் பின் தொடர்கிறதே. அடி சக்கே!


சந்தேகம் கொண்ட மிர்சா காரை நிறுத்த—
என்ன இது? காரை திடீர் என்று நிறுத்து கிறுனே! நான் பின்தொடர்வதா சந்தேகப் படுகிறுனு?


அவன் திட்டம் என்ன? அவன் காரை கடந்து போகிறேன்!


ஜேம்ஸ்பாண்ட் மிர்சா காரை கடந்தார். பிறகு...
உம்.. காரில் அவன் இல்லே. ஏதோ சதி செய்கிறுன்!


எங்கேயே மறைந்து இருக்கான். ஜேம்ஸ் கண்ணு! எச்சரிக்கை! உஷார்!


இவன் என்னே தொடர்ந்து வந்தது உண்மை ஆகிவிட்டது!
இவன் யார்? என்னே தொடர காரணம் என்ன? அவனுக்கு பாடம் கற்பிக்க வேண்டியதே!


ஜேம்ஸ் மறைந்து கொண்டு பார்த்தார்.
அவன் எங்கே? திடீர் என்று தாக்கு வானே?


கொஞ்ச நேரம் கழித்து—
அவன் காரை சோதனே போட வேண்டும். அவன் இங்கே மறைந்து இருப்பான்.


பொறுமையா இருந்தால் பறவை கையில் விழும் என்பது பழமொழி!


ஜேம்ஸ், மிர்சா காரை நெருங்கினர்.
இப்போ பறவையை சுட வசதியா இருக்கு! குறி தப்பாது!






கார் கண்ணாடியில் மிர்சா வருவதை பார்த்து, ஜேம்ஸ் மின்னல் வேகத்தில் சுட்டார். சுடுவதில் தேர்ச்சி பெற்ற அவர் குறி தப்பவில்லை.




இறந்துவிட்டான். இவனிடம் ஏதாவது தடயம் கிடைக்கிறதா பார்க்கிறேன். பையில் ஏதோ இருக்கே!


உம்... மணிபர்ஸ்! இதில் எதுவும் இல்லையே!


இது என்ன கவர்?


வெண்ணிலா வில்லா


வெண்ணிலா வில்லா என்பது ஒரு பங்களாவின் பெயராக இருக்க வேண்டும்.
அதை கண்டுபிடித்து, அங்கு போக வேண்டியது தான்!


வெண்ணிலா வில்லா என்ற அந்த மாளிகைக்கு ஜேம்ஸ் வந்தார்!
இதோ அந்த பங்களா!


வெண்ணிலா பிறை சூடிய அழகான நீர் ஊற்று! எங்காவது மறைந்துகொண்டு இருட்டியதும் உள்ளே நுழையணும்!


007 மறைந்து இருந்த போது—
ஒரு கார் வெளியே வருகிறதே! அதில் 2 பேர் இருக்காங்க. யார் அது?


காரை ஓட்டுவது நெல்சன். மிஸ் மார்கோவின் கனவு வில்லன்!
அருகில் இருப்பது காசிம். இவன் படத்தை 'எம்' காட்டினரே!


இவர்கள் எங்கே போகிறார்கள்? அவர்களை பின் தொடர்கிறேன்.


காசிமும், நெல்சனும் ஒரு திறந்தவெளி ஓட்டலுக்குள் போனார்கள்.
நானும் ஓட்டலுக்குள் நுழைகிறேன்!


காசிம், நெல்சன் இருவரும் இருக்கும் இடம் அருகே ஜேம்ஸ் சென்றார்.
சார்! இந்த டேபிள் காலி!


அந்த ஆள்தான் காசிம். எதிரில் இருப்பவன் நெல்சன். இருவரும் தினமும் சாப்பிட இங்கே வருவாங்க!


தடித்த ஆள் தானே காசிம்.
ஆமா! முகத் தழும்பும், மீசையுமா இருப்பவன் நெல்சன். அவன் காசிமின் உயர்ரக எடுபிடி!
ஓ! காசிம், நெல்சன் இருவர் மீதும் நான் மட்டும் அக்கறை காட்டவில்லை! இவர்களும் அக்கறை கொண்டு உள்ளனர்!


½ மணி கழித்து,
அவர்கள் போகிறார்கள்.
நீ இங்கேயே இரு. நான் காசிமை கவனித்துவிட்டு வருகிறேன்.


இந்த ஆள் காசிமை பிடிக்க விரைகிறான். ஏதோ சுவாரசியமா நடக்க இருக்கு!


இவன் பூட்சை பார்த்தால்...இவன் அமெரிக்காவில் டெக்சாஸ் பகுதியை சேர்ந்தவன் மாதிரி தெரிகிறது! கவ்பாய் பூட்ஸ்!


ஏய்! காசிம்! நில்....


என்னிடமா உன் வேலையை காட்டுகிறாய்? இந்தா வாங்கிக்கோ


காசிம்! காரில் கையை வைத்துக்கொண்டு அசையாமல் நில்! உம்மிடம் துப்பாக்கி இருக்கிறதா என சோதிக்கிறேன்!


ஏய்! அசையா--தே!


அசையாமல் நிற்பதற்கு பதில், அந்த டெக்சாஸ் ஆசாமி ஜேம்சுடன் மோதினர்.






ஆகா! அழகாக செய்திங்க, சார்!


இந்த பைத்தியத்திடம் இருந்து எங்களை காப்பாற்றினீங்க. அதுக்கு நன்றி. ஆமா இவன் யார்?
எனக்கு தெரியாது. உங்களை திடீர் என்று தாக்குவதை பார்த்து வந்தேன்.


இவனிடம் அமெரிக்க பாஸ்போர்ட் இருக்கு. பெயர் ஜேக் டோனர்.
இவனைப் பற்றி எனக்கு எதுவும் தெரியாது!


ஓட்டலில் உங்களைப் பற்றியே பேசினேன். இவனுடன் ஒரு பெண்ணும் இருந்தாள்.


அதோ அவள் வருகிறாள்.
போலீஸ் விவகாரம் ஆகும் முன் போய் விடுவோம்!


நீங்க என்னைப் பின் தொடர்ந்து வந்தால், என் நன்றியை பொருத்தமான முறையில் காட்டுவேன்!


ஜேக்! அந்த பாவிகள் உங்களை என்ன செய்தார்கள்?




கொஞ்ச நேரத்தில் வெண்ணிலா வில்லாவை அடைந்தனர்.

இதன் உள்ளே நுழைந்து நானே சோதனை போட நினைத்தேன். இப்போ விருந்தாளியா நுழைகிறேன். எல்லாம் நன்மைக்கே!













அப்போ நீங்க இங்கேயே என் விருந்தாளியா தங்கி இருக்கலாமே!
அல்லது என் உதவியாளரா இருங்க. நிறைய பணம் தருகிறேன்!


அவர்கள் பேசிக்கொண்டு இருக்கையில், நெல்சன் எங்கோ போன் செய்து ஜேக் டோனர் பற்றி விசாரித்தார்.
சார்! அவன், ஓட்டல் சுலிமேனில் தங்கி இருக்கான்!


ஜேம்ஸ்! என் உதவியாளரா இருக்க சம்மதமானால், அந்த அமெரிக்கனை இங்கே இழுத்து வாருங்க. உங்களுக்கு நான் கொடுக்கும் முதல் வேலை அதுதான்!
அந்தப் பெண்?


அவளையும் இங்கே கொண்டு வாங்க!


ஓட்டல் சுலிமேன போய், அவர்களை கொண்டு வருகிறேன்!
சரி! ஏய்! மிஸ்டர் ஜேம்ஸ் பெட்டியை நம்ப பங்களாவில் வை!


ஓட்டலில்..
ஜேக்! இப்போ வலி எப்படி இருக்கு? தலையில் வீக்கம் இல்லை.


யார் அது? கதவை தட்டுவது?


பெண்ணே! உள்ளே போ. எனக்கு வழி விடு. ஒரு முக்கிய விஷயம் பேசணும்!


உனக்கு இங்கே என்ன வேலை?
ஆத்திரப் படாதே, ஜேக்! உன் துப்பாக்கியை நான் ஏற்கனவே எடுத்து விட்டேன்.


என் நண்பர் மிஸ்டர் காசிம் உன்னை அழைத்துவரச் சொன்னார். அதற்கு முன் சில விஷயங்கள் பேசணும்.


நீங்க யார்?
என் பெயர் பாண்ட். ஜேம்ஸ்பாண்ட்! உங்களைப் பற்றி சொல்லுங்க?


என் பெயர் ஜென்னி. டாக்டர் தாம்சனின் மகள்.
அப்படி சொல்வதில் ஏதாவது முக்கியத்துவம் இருக்கா?

நீங்க காசிமுக்காக வேலை செய்தால் அதில் அர்த்தம் இருக்கு!

உங்க முதலாளி காசிமை கொல்ல எனக்கு போதிய காரணம் இருக்கு!

ஜென்னி! இந்த ஆளுடன் நமக்கு என்ன பேச்சு?

அனாவசியமா எங்க விஷயத்தில் தலையிட வேண்டாம், மிஸ்டர்!

காசிம், உங்க தகப்பனாருக்கு ஏதாவது தீங்கு செய்து விட்டாரா?

என் தந்தை தேச துரோக தண்டனை அடைய இந்த கொடியவன் காசிம்தான் காரணம்.

அதனால்தான் காசிமை தேடி நானும் ஜேக்கும் இங்கே வந்திருக்கோம்!

காசிமால் உன் தந்தை ஜெயிலில் இருக்கார் இல்லையா?

ஆமா. என் அப்பா ஒரு விஞ்ஞானி. ஹூஸ்டன் வான ஆராய்ச்சி நிலையத்தில் வேலை செய்தார்.

ஆராய்ச்சி நிலையத்தில், புதிய கண்டுபிடிப்பு கருவி ஒன்றை காசிம் திருடினார். அந்தப் பழியை என் தந்தை மீது போட்டு விட்டார்!


காசிமை பழிவாங்கவே நாங்க இங்கே வந்தோம்!
வெரிகுட்! அப்படியானல் என்னுடன் வாங்க. அவர் இருக்கும் இடத்தைக் காட்டுகிறேன்!


காசிம் இருக்கும் வெண்ணிலா வில்லாவுக்கு ஜேம்ஸ், ஜேக், ஜென்னி மூவரும் புறப்பட்டனர்.


வெண்ணிலா வில்லாவில்...
வெரிகுட் மிஸ்டர் பாண்ட்! சொன்னபடி ரெண்டு பேரையும் கொண்டு வந்து விட்டீர்கள்!


ஜேம்ஸ்! எனக்கு எதிரா இவங்க நட க்க காரணம் என்ன?
நான் டெக்சாசில் இருந்து வருகிறேன். இவள் என் காதலி!


இவள் தகப்பனர் பெயர் டாக்டர் தாம்சன்.
ஓ! தாம்சனு? ஹூஸ்டன் வான ஆராய்ச்சி நிலைய விஞ்ஞானி. இப்போ ஜெயில்லதானே இருக்காரு?


ஆமா! வான ஆராய்ச்சி நிலையத்தில் ஒரு புதிய கருவியை திருடி, அதை நல்ல விலைக்கு சீனவுக்கு விற்றுவிட்டேன்!
அதுக்கு நீர்தான் காரணம்!


சரி! இப்போ நீங்க எதுக்காக டெக்சாசில் இருந்து இங்கே வந்து இருக்கீங்க?
எதுக்கு என்று இப்போ சொல்றேன்!


வெரிகுட் ஜேம்ஸ்! மீண்டும் என்னை காப்பாற்றி விட்டீங்க!


காசிம்! என் தகப்பனாரை ஜெயிலுக்கு அனுப்பிய மாதிரி எங்களை அவ்வளவு எளிதா தவிர்க்க முடியாது.
பெண்ணே! என்னைப் பற்றி உனக்குத் தெரியாது. நீ சின்ன குழந்தை!
டிரிங் டிரிங்
நெல்சன்! இவங்களை மாடியில் அடைத்து வை.


யார் அது?
சலீம் பேசுகிறன். நமது மிர்சா, ரோடு ஓரமா பிணமா கிடந்தானும். போலீசார் கண்டுபிடித்து இருக்காங்களாம்!
டிரிங்! டிரிங்!


ஏதாவது பிரச்சினையா?
ஆமா! ஒரு கெட்ட செய்தி!


எனது முக்கிய உதவியாளன் ஒருவன் இறந்து விட்டான்!
மாரடைப்பா?


இல்லை! யாரோ சுட்டு கொன்று விட்டார்கள்!


மிர்சா உங்க ஆள் என்று போலீசுக்கு தெரியுமா?
தெரிந்து இருக்கலாம். எதற்கும் நாம் எச்சரிக்கையா இருக்கணும்!


வேறு ஏதாவது தகவல் உண்டா என்று சலீமை விசாரிக்கச் சொல்கிறேன்.
விசாரிக்கச் சொல். எதற்கும் நாம இந்த வீட்டை காலி செய்ய தயாரா இருப்பது நல்லது.


கொஞ்ச நேரத்தில் சலீம் அங்கே வந்தான்.
காசிம் சார்! சலீம் கமாலுடன் வந்து விட்டான்.


உள்ளே வந்த சலீம், அங்கே ஜேம்ஸ்பாண்ட் நிற்பதைப் பார்த்து வாயடைத்து நின்றான்.


அன்னியனை என்னைப் பார்த்து சலீம் திடுக்கிடுவதாக தெரிகிறது!


ஆமா! புதிய ஆளை இந்த இக்கட்டான நேரத்தில் பார்த்ததால், அவனுக்கு அதிர்ச்சி!


சலீம் உங்களிடம் தனியாக பேச விரும்புகிறார்.


ஜேம்ஸ்! நான் இவர்களிடம் பேசிவிட்டு வருகிறேன்!


நெல்சன்! நீ ஜேம்சை அழைத்துப் போய் அவர் தங்க வேண்டிய அறையைக் காட்டு!
வாங்க! மிஸ்டர் ஜேம்ஸ்!


இதோ இந்த அறைதான்.


அந்த சலீம் என்ன சொல்ல போகிறன்? ஜேக்கையும் ஜென்னியையும் எங்கே அடைத்து வைத்து இருக்காங்க?


கீழே காசிம், சலீமுடன் பேசிக்கொண்டு இருக்கும்போது, ஜேம்ஸ் அறையை விட்டு மெல்ல வெளியே வந்தார்.
இங்கே யாரும் இல்லே. மாடி முழுவதும் சோதனை போடுகிறேன்!


ஜேக்கும் ஜென்னியும் எங்கே அடைக்கப் பட்டு உள்ளனர்?


ஒவ்வொரு அறையாக அவர் திறந்து பார்த்தார்.
பல அறைகள் காலியாகவே உள்ளன!


ஒரு அறையை 007 திறந்தபோது—
இதென்ன கவச உடை? இது எப்படி இங்கே வந்தது?


பரிசோதனையின் போது டாக்டர் பார் கொல்லப் பட்டது போன்ற இன்னொரு உடை, இங்கே இருக்கு!


அப்போது—
இது மாதிரி விஷயங்களில் ஈடுபாடு உண்டா ஜேம்ஸ்?


வந்தது, நெல்சன்.
போர் அடித்தது. சுற்றிப் பார்த்தேன். இந்த கவச உடை எதற்காக?
பாது காப்புக்குதான். அவசர நேரத்தில் பயன்படும். காசிம் உங்களைக் கூப்பிடுகிறார்!


நல்லவேளை! எனது துப்பறியும் வேலையை நெல்சன் கண்டுகொள்ள வில்லை. தவறாகவும் புரிந்துகொள்ள வில்லை!


ஜேம்ஸ்! உங்களைப் பற்றி சலீம் புகார் சொல்கிறான். அதற்கு உங்கள் விளக்கம் தேவை!


சரி! அதற்கு என்ன?
என் ஆள் சலீமுக்கு கிராண்ட் பஜாரில் ஒரு கடை இருக்கு!


மிர்சா அங்கு இருந்து புறப்படும்போது அந்த கடை முன் நின்று நீங்க நோட்டம் போட்டதாக சலீம் சொல்கிறுன்!


இதில் விளக்கம் சொல்ல என்ன இருக்கிறது? நான் இன்று பிற்பகலில் பல ஆயிரக் கணக்கான மக்களுடன் பஜாரில் இருந்தேன்.


நான் ஒரு ஆளுக்காக அங்கே காத்து இருந்தேன். அந்த ஆள் வந்ததும், அங்கிருந்து புறப்பட்டேன்!
சரி! நெல்சன் சொல்வதை கேட்போம்!
நானும் இவரை இதற்கு முன் சந்தேகப் படும்படியா பார்த்து இருக்கேன்!


என்ன? நெல்சன் நீயும் ஜேம்சை முன்பு பார்த்து இருக்கிருயா? அது இப்போதுதான் நினைவு வருகிறதா? எங்கே பார்த்தாய்?
லண்டனில் ஜேம்ஸ், பீட்டருடன் அவர் வீட்டுக்கு போனதையும் பிறகு தனியாக திரும்பியதையும் பார்த்தேன்.


பிறகு கொஞ்ச நேரத்தில் திரும்பவும் பீட்டர் வீட்டுக்கு போனார். அப்போ நான் எதிரில் வந்தேன்.


யார் அது பீட்டர்?
அவர் சுற்றுலா வழிகாட்டி. இப்போ இறந்து விட்டார்.


நெல்சன்! நீ பார்த்த ஆள் இந்த ஜேம்ஸ்தானா? நன்றாக நினைவு இருக்கிறதா?
நான் பார்த்த ஆளுக்கும், இவருக்கும் உருவ ஒற்றுமை நிறைய இருக்கு.
எனக்கு லண்டனில் பீட்டர் என்று யாரையும் தெரியவே தெரியாது.


ஜேம்ஸ் நான் ஒரு கதை சொல்கிறேன். அதன் மூலம் உண்மையை கண்டு கொள்ளலாம்.


பீட்டர் ஏற்பாடு செய்த சுற்றுலா திட்டப்படி மார்கோ என்ற பெண் லண்டனில் இருந்து இஸ்தான்புல் வந்தாள்.
இங்கே, பீட்டரும் மார்கோவும் காதல் புரிந்தார்கள் இல்லையா?


இல்லை. பீட்டர், மார்கோ சாப்பிடும் பானத்தில் போதை மருந்தை கலந்து அவளை உடல்நலம் இல்லாமல் செய்தான்.
அது கேவலமான செயல்!


அவன் அப்படி செய்ய, பிளாக்மெயில்— பயமுறுத்தப் பட்டான்.


பிறகு பீட்டர் மார்கோவை நெல்சன் ஆஸ்பத்திரியில் சேர்த்தான்! லண்டன் போனதும் சில காரியங்களைச் செய்ய அவள் அந்த ஆஸ்பத்திரியில் மனோவசிய முறையில் மருந்து கொடுத்து மயக்கப் பட்டாள். ஒரு உருவம் எரிக்கப் படுவதாகவும், அதற்கு அவள்தான் காரணம் என்று குற்றம்சாட்டப் படுவதாயும் அவள் மனதில் பதியச் செய்தார்கள்.


இது கேவலமான செயல்.
உண்மைதான். லண்டனில் அவள் "வேலை" முடிந்ததும், மனோவசிய மயக்க நிலையில் இருந்து விடுபட மாற்று மருந்தை டாக்டர் நெல்சனிடம் இருந்து வாங்கி குடிக்கவும் அவள் தயார் படுத்தப்பட்டு இருந்தாள்.


இந்தக் கதைக்கும் எனக்கும் என்ன சம்பந்தம்?
ஒரு சம்பந்தமும் இல்லை. ஆனால் உம் மீது எங்களுக்கு சந்தேகம்!


அதனால் இனி ரொம்ப எச்சரிக்கையா இருக்கவேண்டி உள்ளது.
உம் துப்பாக்கியை எடுத்துக் கொள்கிறேன்.


நானாக இங்கே வரவில்லை.
நீராக வெளியே போகவும் முடியாது.


ஜேம்ஸ் பாண்டை மேலே கொண்டு போய் அவர் அறையில் அடைத்து வையுங்க!


பிறகு சலீம் மெல்லிய குரலில்...
இந்த வெள்ளை ஆசாமியை உயிரோடு வைப்பது ஆபத்து!


முதலில் மிர்சா இறந்ததால் ஏற்பட்ட பிரச்சினையை தீர்க்கணும். போலீசார் துப்பு துலக்கி, நம்மிடம் வந்து விடக் கூடாது முதலில் அதை தடுக்கணும்!


சலீம் நெல்சன் ஆகியோர் சந்தேகப் பட்டதால் ஜேம்ஸ் மேலே ஒரு அறையில் அடைக்கப்பட்டார். அவர் துப்பாக்கியும் எடுக்கப் பட்டது.
ஜேம்ஸ்! விஷமம் எதுவும் செய்யாமல் இந்த அறையில் இருங்கள்! விரைவில் வந்து பார்க்கிறேன்.




வெளியே கதவை பூட்டிவிட்டார்கள்! உம்... இனி நம்ம கைவரிசையை காட்ட வேண்டியதுதான்!




மேலே ஜேம்ஸ்பாண்ட் தனது பெட்டியில் இருந்த ரகசிய கீழ் தட்டை திறந்தார். அதில் இருந்த இன்னொரு துப்பாக்கியை எடுத்தார்.







தாழ்பாள் திறந்து கொண்டதும்...




அதே நேரத்தில் கீழே—




அப்படியானால் அவர்களை உடனடியா தீர்த்துகட்டி விடுவோம்
சரி! மூவரையும் தீர்த்துகட்டுங்க!


நான் ஜேம்ஸ்பாண்ட் அறை கதவை திறந்து விடுகிறேன். நீ சுடு!
சரி!


அவர்கள் மேலே வர்றாங்க!


அதோ அந்த ஆள்! ?


கமால் சுடுவதற்கு முன் ஜேம்ஸ் பாண்ட் சுட்டார்.


கமால் காயம் அடைந்தான்.







ஜேம்ஸ்பாண்ட் தற்காப்புக்காக சுட்டுக் கொண்டே ஒவ்வொரு அறையாக தேடினார்.












முதலில் என்னை நம்புங்க. காசிம் எனக்கும் எதிரி.


எங்களை கட்டி வைக்கும் முன் உடைகளை எடுத்துக் கொண்டனர்!


இப்படியே வெளியே வர முடியாது. உடை வேண்டும்!
அதற்கு நேரம் இல்லை! குயிக்!


நாம் காயம் இல்லாமல் தப்பித்தால் அது பெரிய காரியம்!


மாடிக்கு போக முடியாதபடி ஜேம்ஸ் சுட்டுக் கொண்டே இருக்கார்!
அவர்களை மடக்க எனக்கு தெரியும்!


போலீஸ் வருமுன் இவர்கள் மூவரையும் பிடிக்கணும். அல்லது தீர்த்து கட்டணும்!


கொஞ்சம் பெட்ரோல் கொண்டு வா!
இதோ! நொடியில்!


பெட்ரோலை ஊற்றி வீட்டை தீ வைத்தனர்.
புகை!


சுடுவதை நிறுத்திவிட்டனர். முதல் தளத்தில் தீ வைத்து விட்டனர்!
ஐயோ! நாம் தீயில் மாட்டிக் கொண்டோம்!


ஜன்னல் வழியாக தப்ப முடியாதபடி கிரில் போட்டிருக்கு. நாம சாக வேண்டியது தானா?


ஜென்னி! பீதி அடையாதே! ஒரு ஜன்னலில் கிரில் இல்லை!


ஜேக்! உங்களை கட்டிப் போட்டிருந்த கயிறை எடுத்து வாங்க!


அதோ ஜன்னலில் அவர்கள்!


பின்னுக்கு போங்க! நம்மை பார்த்துவிட்டு சுடுகிறார்கள்!


நாம் கீழே குதித்தா சுடுவாங்க. மேலே இருந்தா தீயில் கருக வேண்டியதுதான். கடவுளே! இதென்ன சோதனை!


ஜேம்ஸ்! நான் பேசறது கேட்கிறதா? ஒரு முக்கிய விஷயம் சொல்ல வேண்டும்!


ஜேம்ஸ்! இனி உங்களால் தப்ப முடியாது. உயிர் மேல் ஆசை இருந்தால் ஒரு ஒப்பந்தம் செய்யலாம்!


உயிருக்கு விலையா பேசுகிறாய்?
ஆமா! நான் வியாபாரி. கொடை வள்ளல் அல்ல!


சரி! சொல்லு!
கவச உடைதான். வேறு என்ன?


கவச உடையா? அதற்கு என்ன?
கவச உடையை நீர் ஆர்வமாக பாாத்ததாக நெல்சன் சொன்னன்!


இந்த கவச உடைதானே! உம், மேலே சொல்!
அதை ஜன்னல் வழியா வெளியே போடும். அதை எடுத்துக் கொண்டு நாங்க போய் விடுகிறோம். நீங்க முடிந்தால் தப்பித்துப் போகலாம்!


உடனடியாக செய்யாவிட்டால் குண்டுகளால் துளைப்போம். இல்லே தீயில் கருகி சாக வேண்டி வரும!


ஜேம்ஸ்! அந்த தடியனை நம்ப வேண்டாம்!
நாம சாகணும். இந்த கவச உடையும் அவனுக்கு வேணும். இதுதான் அவன் திட்டம்.


ஐயோ! இப்போ என்ன செய்யலாம்? புகை யால் மூச்சுகூட விடமுடிய வில்லே.


ஜேக்! அந்த கயிறு எங்கே?


ஜேக்! உனக்கு கயிறு வீசி பழக்கம் இருக்கா?
துள்ளி ஓடுகிற மாட்டை கூட கயிற்றை வீசி பிடித்து விடுவேன்!


வெரிகுட்! அதோ பார்! நீர் ஊற்று. அதன் மேல் பிறை வடிவில் ஒரு இரும்பு. இதில் கயிற்றை வீசி கட்டு!


அந்த நீர் ஊற்று பிறை இரும்பு கம்பியா! முயற்சி செய்கிறேன்!
உம்! வீசு!


ஜன்னல் அருகே போக வேண்டாம். சுடுவாங்க.
பிறகு எப்படி கயிறை வீசுவது?


அப்படியே ஜேக் கயிற்றை வீசி கட்டினாலும் நாம் எப்படி தப்பிப்பது? கயிற்றில் கீழே இறங்கியதும் சுடுவார்களே!


ஜென்னி
பீதி அடையாதே!
ஆபத்து நேரத்தில்
தைரியமும், தன்
நம்பிக்கையும்
வேண்டும்.


ஜேக் கயிற்றை
வீசினான். குறி
தப்பியது.
ஜேம்ஸ்!
என்ன
செய்கிறீர்?
உம்மை
எச்சரிக்
கிறேன்.


ஜேக்!
நான் காசிமுடன்
பேசிக்கொண்டே
இருக்கேன். நீ
மீண்டும் முயற்சி
செய்!


ஒப்பந்தம் பற்றி ஜேம்ஸ்
பேசிக்கொண்டே இருந்தபோது,
ஜேக் கயிற்றை சரியாக
வீசி கட்டினார்.
நான்
இறங்கப்
போகிறேன்!
ஜேம்ஸ்!
அந்த கயிற்றின்
வழியாக நீர்
இறங்கும்போது
சுட்டுக் கொல்வேன்.
இது கடைசி
எச்சரிக்கை!


ஜேம்ஸ்! அந்த கவச உடையை அணிந்து இறங்க போகிறீர்களா?
லண்டனில் இந்த மாதிரி உடை ஒருவரை அழித்தது. அப்படி இல்லாமல் இது என்னை காக்கும் என்று நம்பு-வோம்!


ஜேம்ஸ் அந்த கவச உடையை அணிந்துகொண்டு, உயிரை துச்சமாக மதித்து கயிற்றைப் பிடித்து இறங்கினர்.


கயிற்றில் அவர் சறுக்கும்போது சரமாரியாக சுட்டனர்!


அந்த கவச உடையை குண்டுகள் துளைக்கவில்லை. ஜேம்ஸ் வெற்றிகரமாக இறங்கினார்.
அவன் கைக்கு குறி வை!


அதற்குள் ஜேம்ஸ் இறங்கிக் கொண்டு அவர்கள் ஒவ்வொருவராக சுட்டார்.


காசிமும், அவர் ஆட்களும் மறைவிடம் தேடி ஓடினர்!


சுடுவதை நிறுத்தினால், நானும் சுட மாட்டேன்!
ஆனால் அவர்கள் துப்பாக்கியை கீழே போடவில்லை.


சரி! அப்படியானால் சுட்டு பார்ப் போம்.


அடுத்த சில நிமிடங்களில் காசிமின் ஆட்கள் காயப்பட்டு விழ, காசிம் வழிக்கு வந்தார்.
ஜேம்ஸ்! துப்பாக்கியை கீழே போடு கிறேன்!


ஜேக்! சீக்கிரம் இறங்குங்க! கயிர் தீ பிடித்து விடக் கூடாது!




முதலில் ஜென்னியும், பிறகு ஜேக்கும் இறங்கினர்.
வெரி குட்!


அடுத்து என்ன?


பேசக்கூடிய நிலையில் யார் இருக்கிறார்கள் என்று பார்ப் போம்!


இதோ காசிமே உயிரோடு இருக்காரே!


இவரை போலீஸ் நிலையம் கொண்டு போகவா?
என் சக உளவாளி ஸ்டெல்லா வீட்டுக்கு கொண்டு போய் சிகிச்சை அளிப்போம். அவரிடம் சில உண்மைகளை வரவழைக்க வேண்டும்!


பிறகு—
ஜேம்ஸ்! நான் போலீசில் சிக்க விரும்ப வில்லை. நீங்க கேட்பதுக்கு பதில் சொல் கிறேன்!


டாக்டர் பார், கவச உடை—அதைச் செய்யும் பார்முலா ஆகியவற்றை 10 லட்சம் டாலருக்கு என்னிடம் விற்றார்.


ஆனால் அவர் ரகசியமா இன்னொரு உடை தயாரித்து, அதை இங்கிலாந்து ராணுவ இலாகாவுக்கு விற்க முனைந்தார்.


அதனால்
டாக்டரையும்,
அந்த உடையையும்
அழித்து விட்டீர்
இல்லையா?


அதற்காக
ராணுவ இலாகாவைச்
சேர்ந்த மிஸ்
மார்கோவை
மனோவசிய முறையில்
அடிமைப்
படுத்தினீர்!
ஆமா! கவச
உடை சோதனை
நடக்கும் இடத்துக்கு
நெல்சனை அனுமதிக்க
அவள் ஏற்பாடு
செய்வதற்காக!


கவச
உடையை
எப்படி எரிய
வைத்தீர்?
ஒரு ரசாயன
பொருள் மூலம்
கண்ணுக்கு தெரியாத
வாயுவை ஏற்படுத்தி,
உடையின் தாங்கும்
சக்தியை குலைக்க
செய்தோம்.


அதனால் கை
குண்டு வெடித்த
வேகம். தாக்கும் சக்தி
ஆகியவை தாங்காமல்
உடை எரிந்தது.
அதன்பிறகு
மார்கோ, சுற்றுலா
வழிகாட்டி பீட்டர்
இருவரையும் நெல்சன்
தீர்த்துகட்டினான்
இல்லையா?


டாக்டர்
குறுக்கிட்டார்.
ஜேம்ஸ்!
மேற்கொண்டு கேள்வி
கேட்க வேண்டாம்.
காசிம் உயிருக்கு
ஆபத்தான நிலையில்
இருக்கார்!


இதோ!
இறந்து
விட்டார்!
ஐயோ!
அப்படியானால்
என் தகப்பனாரை
எப்படி
விடுவிப்பது?


கவலைப்படாதே
ஜென்னி! வான ஆய்வு
நிலயத்தில் இருந்து
காசிம் முக்கிய கருவியை
திருடி சதி செய்ததை
நான் வாக்குமூலம்
கொடுக்கிறேன்.

ஜென்னியின் தகப்பனாரை
காசிம் எப்படி சதி செய்து,
ஜெயிலுக்கு அனுப்பினார்
என்று காசிமே அவரது
வெண்ணிலா வில்லா வீட்டில்
கொடுத்த ஒப்புதல் வாக்கு
மூலத்தை, ஜேம்ஸ் தன்
அதிகாரபூர்வமான வாக்கு
மூலமாக எழுதி இங்கிலாந்து
உளவுத்துறை தலைவர்
"எம்"முக்கு அனுப்பினார்.
அதை எடுத்துக்கொண்டு
மிஸ்டர் எம் அமெரிக்கா
போனார்.




ஜேம்ஸ்பாண்ட்! அமெரிக்கா வந்தால் எங்களை தவறாமல் சந்திக்க வேண்டும்!

ஜேக்! நிச்சயம் சந்திப்பேன். எனக்கு ஒத்துழைத்த உங்க இருவருக்கும் நன்றி. போய் வாருங்க! வணக்கம்!

முற்றும்.

ராணி சிண்டிகேட் சார்பில் வெளியிட்டவர், ஆசிரியர்: எஸ்.ராமஜெயம், 1091, பெரியார் நெடுஞ்சாலை, சென்னை–600 007. அச்சிட்டவர்: சி.கல்யாணசுந்தரம், ராணி அச்சகம், 1091, பெரியார் நெடுஞ்சாலை, சென்னை–600 007. 

# ரூ. 50- பரிசு: கருத்துப் போட்டி -19

"கவச உடை!" சித்திரக் கதையை படித்துவிட்டீர்கள் அல்லவா? இனி இந்தக் கதையில், உங்கள் மனதைக் கவர்ந்த சம்பவம் எது? அதற்கான காரணம் என்ன? என்று உங்கள் கருத்தை, "ராணி காமிக்ஸ்", ஒரு பக்க அளவுக்கு மிகாமல், எழுதி அனுப்புங்கள்.

மிகச் சிறந்த கருத்துக்கு ரூ. 50 பரிசு வழங்கப்படும்.

தேர்ந்து எடுக்கப்பட்ட கருத்து, 1–9–85 இதழில் பிரசுரிக்கப்படும்.

கருத்துப் போட்டி நிபந்தனைகள்:—

(1) கருத்துக்கள் எங்களுக்கு வந்து சேரவேண்டிய கடைசி தேதி 10–8–85. அதன்பின் வரும் கருத்துக்கள் போட்டிக்கு ஏற்றுக்கொள்ளப்பட மாட்டா.

(2) போட்டியில் கலந்து கொள்பவர்களுக்கு வயது வரம்பு கிடையாது.

(3) போட்டியில், ஆசிரியர் தீர்ப்பே முடிவானது. சட்டப்படி கட்டுப்படுத்த முடியாது.

(4) கீழே உள்ள பாரத்தை பூர்த்தி செய்து, "கருத்து"டன் சேர்த்து அனுப்ப வேண்டும். அது இல்லாமல் வரும் கருத்துக்கள் ஏற்றுக்கொள்ளப் படமாட்டா.




கருத்துப் போட்டி எண்: 19

பெயர்: ..........................................

முகவரி: ..........................................

..........................................

..........................................

..........................................

முகவரி:—
கருத்துப் போட்டி,
"ராணி காமிக்ஸ்",
1091, பெரியார்
நெடுஞ்சாலை,
சென்னை–600 007.

போட்டி நிபந்தனைகளுக்கு கட்டுப்படுகிறேன்.

..........................................

(கையொப்பம்)

# உங்கள் கருத்து

## எரி நட்சத்திரம்!

"எரி நட்சத்திரம்" சித்திரக் கதையில் நான்கு பேர்களை கொலை செய்துவிட்டு, அண்ணனை தீர்த்துகட்டியபின் அண்ணியை அடையலாம் என்று நினைத்த கொடியவன் ரோகாவுக்கு சரியான முடிவு! —வை. ரவி, மொரப்பூர், அரூர்.
—வி. என். விசு சந்திரன், பெங்களூர்.

வில்லன் ரோகாவின் கில்லாடித்தனம் என்னை பிரமிக்க வைத்தது! —பி. அமுதா, வண்டிப் பெரியார்.

எரி நட்சத்திரம் போல் ஒரு கதையை இதுவரை நான் படித்தது இல்லை! —கே. நூர்முகமது, காயல்குடி.
—டி. சிவகுமார், மேற்கு அண்ணாநகர், சென்னை-101.

எரி நட்சத்திரம் ஒரு பயங்கர யுக்தி!
—எம். பீர்முகமது, குளச்சல்.
—எம். ஆர். மோகன, மேட்டுப்பாளையம்.

ஜேம்ஸ்பாண்டின் வீரசாகசங்கள் என் மனதைக் கொள்ளை கொண்டுவிட்டது! —எஸ். சிவகுமார், கடலூர்.
—சரளா தியாகராஜன், மாம்பலம், சென்னை-17.

இப்பொதெல்லாம் பலூன்களை கண்டாலே பயமாக உள்ளது! —ஏ. முகுந்தன், ஸ்ரீரங்கம். —ஆர்.எம்.குமார், கரூர்.
—எஸ். சிவகீர்த்தி, அண்ணைல்நகர், மொரப்பூர்.
—வி. ரெங்கராஜன், பழவங்காடு, திருவனந்தபுரம்
—என். நந்தகோபாலகிருஷ்ணன், பாலத்துறை.

## எஸ்டேட் பேய்!

"ராம்ஜி" எழுதும் "எஸ்டேட் பேய்!" தொடர்கதையில் மானேஜர் மனோஜுக்கு என்ன நேருமோ என மனம் படக் படக் என்று அடிக்கிறது.
—தெ. பிரேமலதா, அதிராம்பட்டினம்.

"எஸ்டேட் பேய்" தொடர்கதையில் ஆசிரியர் நடை திகிலையும், மர்மத்தையும் அதிகரிக்கும் வகையில் கம்பீரமாக செல்கிறது! —சி. சாம். கூட்டாடா எஸ்டேட், நீலகிரி.
—எம். கவுரிசங்கர், நுங்கம்பாக்கம், சென்னை-34.

"எஸ்டேட் பேய்!" வித்தியாசமான தொடர்கதை என்பதில் சந்தேகமே இல்லை! —த. ஏழுமலை, அரகண்டநல்லூர்.
—எஸ். பார்த்தசாரதி, பண்ணைப்பட்டி.

திகைப்பூட்டும் திருப்பங்களால் திகைப்பூட்டுகிறார், ராம்ஜி!
—என். ஜி. தஸ்தகீர் சாகிபு, நாகூர்.

"சஸ்பென்ஸ்" மன்னர் ஹிட்ச்காக் கதைகளைப் போல் திகிலை உண்டாக்குகிறது, எஸ்டேட் பேய்! —சா. அன்பழகன், லோயர் அணைக்கட், திருவிடைமருதூர் தாலுகா.
—இ. ஜாகிர் உசைன், மணப்பாறை.

"எஸ்டேட் பேய்!" ஒரு "சூப்பர்பாஸ்ட் எக்ஸ்பிரஸ்!" அத்தனை வேகம்! —ஜெயா சத்தியநாராயணன், கொடுமுடி.
—சா. சதீஷ்குமார், ஜோதிபுரம்.

இங்கே 9 வகை உருவங்கள் உள்ளன. அவற்றில் கீழே உள்ள வட்டம், நீள வட்டம் இவற்றில் ஏதாவது ஒன்று கலந்து உள்ளது. அதைக் கண்டு பிடியுங்கள்.
(விடை: கீழே.)











வட்டம், நீள வட்டம்









RANI COMICS
(TAMIL FORTNIGHTLY)

Regd. No. TN/MS(N)/461

# ராணி காமிக்ஸ்

அடுத்த இதழில்..!

குற்றவாளி — களைத் தேடிப் பிடித்து பழி வாங்கும் வீர இளைஞனின் வீர உலா!



# பழிக்குப் பழி!

முழு நீள சித்திரக் கதை!

திகில் கதை மன்னன் ராம்ஜி எழுதும் எஸ்டேட் பேய்!

துப்பறியும் மர்ம, பேய் தொடர்கதை!




ரூ.50 பரிசு:
வாசகர் போட்டி!

படிக்கத் தவறாதீர்கள்!

15.8.85-ல் வெளிவருகிறது!

PRINTED AT RANI PRINTERS, MADRAS-7.